உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ சமிவனக்ஷேத்திரமென்னுங் கோவிலூரில்
ஸ்ரீமத் முத்திராமலிங்கஞானதேசிகரவர்
களின்

ஆதீனத்திலெழுந்தருளியிருந்த
துறவுசுவாமிகள் என்றுவழங்கும்
ஸ்ரீ அருணாசலஞானதேசிகசுவாமிகள்

பன்னூல்களிலிருந்தெடுத்துத் திரட்டிய

# சீடாசாரம்.

இஃது

௸ ஆதீனத்திலெழுந்தருளியிருக்கும்
மகாதேவஞான தேசிகரால்,

காரைக்குடி
ஸ்ரீ மீனாம்பிகை அச்சுக்கூடத்தில்,
பதிப்பிக்கப்பெற்றது.
1925.

உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# சீடாசாரம்.



## காப்பு.

ஆனைமுகனாறுமுக னம்பிகைபொன்னம்பலவன்
ஞானகுருவாணியை யுண்ணூடு.

## நூல்.

### முத்திக்கேது.

தந்தைதாயுமெய்த்தகையுடையுறவுஞ்ஞானுங் கல்வியுந் தகுமுயிர்த்துணையுஞ், சிந்தையாருநற் சீலமும்வலியுந் திருவுமின்பமுஞ் சிதைவிலாவறிவு, முந்தையாமுளத்துவகையுமுயிருமேமுத்தியு மொழிவருஞ்சமைவு, மெந்தையாகிவந் தேழையேனையுமாளிறைவனார் கழலாகுமென்றனக்கே. (க)

### வேறு.

எந்தைதா யாவானுஞ் சார்கதியிங்காவானு
மந்தமிலாவின்பமக்காவானு-மெந்தமுயிர்
தானாகுவானுஞ்சரணாகு வானுமருட்
கோனாகுவானுங் குரு.

### வேறு.

முக்தி சித்திக்குமேது மொழிவர்கள்சிலர்வெவ்வேறு, சித்தமற்றுலாமென்றுந் தீவினைசிதைந்

காலென்று, மொத்தகல்போகாலென்று முரியஞா னத்தாலென்று, மித்திறமனைத்காலாகா விறைதிரு வருளாலாமே. (௩)

எஞ்ஞானமந்திரங்கள் யோகங்க ளடாயமெல்லா, மெய்ஞ்ஞானவிட்டைக்காணும் வேதனைந்செய்யமாட்டா, தெஞ்ஞானக்கடைக்கண்வைக்க தேசிகன் சித்தமத்தி, லஞ்ஞானம்பறிந்தபோதே *யமுதவீடதாவுந்தோன்றும். (௪)

ஆர்த்ததுபிறவியென்று மஞ்ஞான பாசமத்தைக், கூர்த்தமெய்ஞ்ஞானவாளைக் கொண்டுசேதிக்கவேண்டு, மேத்திமெய்ஞ் ஞானவாளை யேபவனருட்கண்ணாலே, பார்த்தபின் னில்லாப்பெத்தம் பருதிமுன் னிருள்போலன்றே. (௫)

விடத்தினன்மூர்ச்சித்தானை விடம்வல்லார்பார்க்கத்தீரு, மடர்த்தல்லாரெல்லாம்பார்த்து மதுதீராவாறுபோல, விடத்தினையுடையஞான விறைவனூர் பார்க்கினல்லாற், சடத்துவமாயையார்செய் சடக்குடைப்பிறப்பறுகே. (௬)

வேறு.

சுருதியுமிருதியுஞ் சொன்னவாறுநின், றிருமையுமகித்தமென் றேதும்விட்டுநற், குருவினைவழிபடிற் கோதிலாவவ, னருளிடுமழிவறநின்றவைப்பொருள். (௭)

* அமலவீடென்று பாடமோதுவாருமுளர்.

வேறு.

எண்ணிலாக்கல்வியானு மிலங்கிய கேள்வியானு
ந், திண்ணிதாமதியினானுந்தெளிபவராரானுதீர,நண்ணி
யஞானிதானே நயந்தருள்செய்யில்ஞானக், கண்ணின
ற்காணலாகுங் கரத்திலாமலகம்போல. (அ)

பருவிடங்கடியுண்டானே பாவிப்பான் கருடன்
றன்னைப், பெருகியபித்தன்றானே பிழிந்துமாமருந்து
கொள்வா, னிருமையு மறியாமூடர்க் கியலுமோவி
னையிற்கூடக், குருபரன்கூட்டிற்கூடுங்கூடாதேதற்கூடா
தென்றான். (கூ)

கட்டுண்டகள்வன்றானேகட்டினை விட்டுக்கொள்
வான், விட்டவேதனையைத்தீர்த்து விதிப்பவர்வேறே
வேண்டு, மட்டமாசித்தியோகா மறிவினாலறியலாமோ
தட்டறப்பாசந்தீர்க்கத்தற்பரங் குருவேவேண்டும்.(க0)

வேறு.

உருவன்றியேநின் றுருவம்புணர்க்குங், கருவன்
றியேநின்றுதான்கருவாகு, மருவன்றியேநின்ற மாய
ப்பிரானைக்,குருவன்றியாவர்க்குங்கூடவொண்ணாதே. (

வேறு.

தேசிகன்பதநற்சேவையின்வலியுந் திகழ்பதத்த
ளவிலாவன்பு,மாசினன்முத்தியதில்விருப்பதுவு மமல

வாரணத்தினில்விருப்பு, நாசமாமிந்தவுடலினில்வெறு ப்புநசையற விடயத்தினுவர்ப்பு, மீசனெப்பொருளு மென்னுநற்றுணிவு மிவையெழின்முத்திசாதனமே. (

திகழுநற்குரவன்றிருவுளம்பார்த்துச் செய்யுமே வற்சிறப்பதுவு, மகிழுநற்குரவன் மருவுநற்பதியே மன்னிநீங்காதவாதனையும், புகழுநற் றமரும்பொன்மு தற்பொருளும் பொருந்துநோயெனமதித்திடலுந், தகைவுடைச்சமைவுஞ் சாந்தியுமுத்திசாதனமென்பர் தக்கோரே. (கசு)

முடிகவித்துலகாள் திருவிகழ்ந்திறைவன்மொய்க ழல்சூடுநற்றிருவும், படிதனக்கேவல்செய்பதமிகழ்ந்து பரமனுக்கேவல்செய்பதமு, மடையுநற்சுவைகளனைத் தையு மிகழ்ந்திங்கமலனற்சேடமாருதலு, மிடையறத் திகழு முத்தி சாதனமென்றிசைத்திடுமெலாயிலார ணமே. (கஎ)

துரிசினற்பாரம் பரியமாமுறையிற் றுகளறவ ழிவிலாத்துணிவும். பரிவுறக்குரவன்பாதமேநோக் கிப்பழுதறப்புகழுபண்பதுவு, மரியநற்குரவனருள றம்பொருளோடின்பம்வீடென்னுமாண்மையதுந், தெரிவுறத்திகழுமுத்திசாதனமாய்ச் செப்புவர் தெய் வஞானிகளே. (கஅ)

வேறு.

நேரநெஞ்சிஞற்றனக்கது நினைவலைவாயினுநெறி யென்றே, தேசிகன்றிருவுள்ளமே செய்குவான்செனி

த்திடுங்குலத்துக்கு, மாசகாசினுமாச்சிரமத்திலேவழு
வினுமுலகெல்லா, மேசிவீடினுமறம்புகழ்தனம் பிறவி
மூப்பினுமிடரேனும். (கசு)

என்றனக்கிதுவாய்த்தவாறறிகிலே னெம்பிரான்
கழற்கேவ, றன்றனக்குநானுரிதுதகுவதோ தமியனே
ற்கென்றென்று, சென்றுறப்பெருமார்வமுமச்சமுஞ்
செறிதரவடிமைக்க, ணின்றியற்றியசேவனியல்பெ
ண நிகழ்மறைசொலுமைந்தா. (கஎ)

நிறம்பெறநீராடாமுன்னீராடலின்றிடவிருத்
தல்தான்கிடத்த, லுறங்குமுன்னுறங்கலுண்ணுமுன்
னுண்ட லுரையெனவுரையாமலுரைத்த, லறம்பழி
யெவற்குங்கூறுதலருளாததுசெய்தலருளியபணியை,
மறந்தனனென்றல்குருவலாற் றெய்வமதித்தல்செய்
பவன்மகனல்லன். (கஅ)

## வேறு.

அருளறமங்குறைந்திடுத லறமலாதுரைத்தலறை
பொழுதிலிடையுரைத்த லகங்கரித்தங்குரைத்தல்,
பொருளறிவுதானுரைத்தல்பொருளல்லாதுரைத்தல்
புன்கோட்டிகொண்டுரைத்தல் யொடிவனவங்குரைத்
த, லிருளுறுமச்செவிசொல்லேலவலிசைத்திடுதலிடம
றியாதிறையருளிச்செயவுரைத்தல் வினவல், தெரு
ளுறாநற்குருகீர்த்தியல்லதுபாடிடுதல்தேசிகன்றன்ச
ன்னதியிற் றிரவிடுமினவையே. (ககூ)

வேறு.

நீரிடத்தினுநிசியிருளிடத்தினுநெறிகளிற்பயமுறு
மிடத்துஞ், சீரருட்குரவன்முன்புசேவிப்பான்றிகழ்ந்
தமற்றுளநெறியவற்றிற், பேரருட்குரவன்பின்புசேவி
ப்பான்பிறிதொருகிர்த்தைபற்றிறைவ, னார்திருக்கழலிற்
சாயைபோன்முன்பின்னாய்விடாரன்பினுத்தமரே. ( )

வேறு.

தன்னுளத்தெழுதீங்குதனாயகன், முன்னுரைத்
திணிமேன்முளையாவகை, சொன்னவப்பரிசேசுடவே
ண்டலா, லன்னவப்பதிவிட்டகல்வானலன். (உ௫)

வேறு.

தனமாக்காயமுயிர்மூன்றுந்தலைவற்கீந்தங்கிவை
கெடினு, மனவாக்காயகன்மத்தால்வணக்கங்கெடாத
மனத்தராய், நினைவாக்காயமஷ்டாங்கபஞ்சாங்கநேர்
சிட்டாங்க, மௌனநால்வணக்கஞ்சிராங்கமுடனிறையா
ற்பிறவியறுவோர்க்கே. (உ௬)

சென்றபோதிறைவன்றிருவடிச்சலைத்தேசிறந்த
பஞ்சாங்கவட்டாங்க, மொன்றவேவணங்கியொப்பி
லானருளையுளமதுநிறையவேபருகிப், பின்னரப்பரி
சேவிடைகொளும்பொழுதும்வணங்குகபெரியவன்மு
கப்பே, நின்றுநெக்குருகித்தன்றன்வாயாரத்துதிப்
பதாநீதியன்பருக்கே. (உ௭)

குரவனூர்நீர்த்துமொழிவனவெல்லாங்குருதராமா கவோதிடுகத், தெரியுமாறரியஞானகோசத்தைத்தெரி ந்திடினெடுத்தவிழ்த்திறைமு, னரியவாதனத்தில்வை த்திறையருட்டாள்வணங்கியங்கதன்பயன்கேட்டாங், குரியகோசத்தைக்கட்டிநாயகன்றூளொப்பறவணங்கு தலொழுக்கே. (௨௮)

எப்படிக்கிறாடவர்களேயெனினுமிறையுளத்த டைத்தவர்தம்மை, யப்பரம்பரமனென்றுளத்துணர்க வயன்முதன்மூவரேயெனினு, மெய்ப்படவிறைவன் றிருவுளமிலதேன்மீண்டுபாராதுகைவிடுக, செப்பிட விறைவன்றிருவருணிறைந்தசீடராசாரநன்கிதுவே. ( )

இப்பரிசிறைவன்றிருவுளம்பிழையாதிலங்கியவே வலின்வலியா, லெப்பரிசுள்ளசித்திகள்வலிகளிசைந்தி டாநிற்குமங்கவர்பா, லப்பரிசெல்வச்சித்தியும்வந்தா லகந்தையும்வியப்புமேவாமே, தப்பறவெனையாட்டம்பி ரானேயவற்றன்மையென்றருளினைப்பணிவாம். (௩௦)

பெருந்தவமில்லான்றன்னைப்பேணியமடந்தையு ள்ளத், திருந்தவைமுடிந்ததென்றுலிகபரந்தெரிந்தஞா னப், பெருந்தவக்குருவைத்தெய்வமென்றுமெய்ப்பே ணவல்லார்க், கரும்பொருள்யாதுமில்லை யிருமையுமு கவிடத்தே. (௩௧)

சாற்றியபரிசிற்றவறுதலேவன் மறுத்துலாம்பிழை யதுசாற்றி, னுற்றவங்கதனைத்தீர்த்திடற்குபாய மாய்ந் திடத்தொன்றினுலில்லைச், சேற்றினைச்சேற்றாற்கழுவ லாயிடுமோதெளிந்தநீர்கொண்டலாலதுபோ, லாற்றி யவிறைவனருட்டருநீராலப்பிழைச்சேறுநீக்கிடுவான். ()

வேற்றுளகுற்றமியாவையுந்தீர்க்கும்விமலமாமி றையருளென்று, லாற்றவங்குற்றப்பிழையைநீக்குவதா மவனருளன்றிவேறுண்டோ, போற்றியங்கவன்றன் பொன்னடிபொருந்திப்புனிதபாதோதகமாடி, யாற்ற வங்கமலனருளினைமுழுக்கிலக்கணந்திருமப்பிழையே.

அறைந்தவப்பரிசப்பிழையினைநீக்காதவனெரிநி ரயம்வீழ்ந்தழியும், பிறந்திடிற்பிரமவரக்கனும்பெரும் பாம்பாமெனப்பெருமறைபேசுந், சிறந்தனபிழைதீர் வளவுமங்கவன்றன்றெரிசனம்பரிசனந்தருமோ, மறந் துமற்றணுகார்மாதவத்தடியா ரணுகில்வன்பாதகமன் றே. (௩௪)

தேசிகன்றிருவுள்ளமுண்டாகவச்சிவந்திகழ்ந்திடு கின்று, னீசனிங்கருள்செய்யவந்திருக்கிறவிடமிவன் றிருமேனி, மாசதொன்றிவனைவிலேசெயிலெரிவா யநாகினிற்பூத, நாசமெவ்வளவவ்வளவுஞ்செலநண்ணு நன்னெறிநண்ணான். (௩௫)

### வேறு.

குரவனேகுறி யேதுமிலாச்சிவ, னுரியசத்தியே
யொப்பிலாவம்பிகை, கருதுமைந்தரேகந்தர்விநாயகர்,
பெருகுசுற்றமும் பேணுமப்பத்தரே. (௰௬)

### வேறு.

சற்குருபரசிவன்றானாயினும்வாசிசாற்றிற், சற்கு
ருசிவன்கோபித்தாற்சமிப்பிக்குஞ்சிவனாலென்றுஞ், ச
ற்குருகோபந்தன்னைச்சமிப்பிக்கவொண்ணாதத்தாற், ச
ற்குருநாதன்பாதந்தப்பிடான்முத்தனன்றே. (௰௭)

### வேறு.

அருவெனுமமலன்றானருளிலனெனினுஞ்சார்
குருபரனருளுண்டேயெனிலொருகுறையுண்டோ
திருவடிதரவந்தார்திருவுளமிலரென்று
ளொருவருமிலர்கண்டீருறுதுயர்களைகின்றார். ( )

### வேறு.

குருபரனேபரமசிவன்பரேசன்றானேகுருவரனு
மாகினுமேயொருகாலத்தி, னிருமலமாம்பரமசிவன்மு
னிவுற்றாலுங்கிரில்தயாநிதியானகுரவன்காப்ப, னருள்
வடிவேதிருவுருவாயெழுந்துநின்றவாசிரியனென்றேனு
முனிவுற்றானேற், றிரிவிதமாமுலகத்துமம்மாணைத்
தியக்கமெலாந்தீர்த்தெவருங்காப்பதில்லை. [௰௯]

தந்தைதமுதற்பெந்துவெலாமனந்ததேதகந்தருவதலாலனுதிபவபந்தந்தீர்க்கார், சிந்தையினலாய்ந்திடிலப்பெந்துவெல்லாஞ்சிறுமைதருஞ்சத்துருவேயாகாநிற்ப, எந்தமிலாவருள்வடிவாங்குருவோவென்றுலகண்டபரஞானத்தையருளானல்கித், தொந்தமகாமனுதிபவபந்தமெல்லாந்துப்பறவேயன்றுகத்துடைத்துக்காப்பன். (சய)

வேறு,

இந்தவிடும்பையுடம்புறுமேது, தந்தையெனப்புகழ்கின்றிலர்தக்கோ, எந்தமிலாதவகண்டமுநம்முட்டந்தவர்தந்தையெனச்சமைவுற்றார். (சக)

வேறு,

குருபாதம்பூசிநாளுங்குருநாமஞ்செபியெப்போதும், குருபாதந்தியானம்பண்ணுகுருகீர்த்திதோத்திரஞ்செய், குருபாதநினைக்கத்தீருங்குருத்தோடமல்லாத்தோடம், குருபாதந்தன்மேலுண்டோகுருவின்பேர்சிவனுமன்றே. (சஉ)

வேறு.

வருபிறப்பறவேவேண்டினன்மறையிறென்னுமடம்புயத்திணைமலர்த்தற், கிரவியாய்நெஞ்சிற்கிசைந்தநற்குருவையாதொருவழியினலிறைஞ்சி, யருள்சுரந்திடுதற்காவதேசெய்வானருமறைமுடிவெலாமறையும், பொருளைநேராகவுமக்கெனக்கீசன்புகன்றவப்படியிலேபுகன்றேன். (சங)

வேறு,

ஆசிரியன்முன்பாகவகண்டார்த்தத்தையடைவாக வழிவுற்றமாணுனந்தச், தேசிகனைத்திரவியமேமுதலி ருந்தாந்திடமானலோபத்தாற்பூசியானேன், மோசன மேயிலாதவனுக்கும்பிபாகமுதலியதில்வீழ்ந்திடுவனு தலாலே, தேசிகனையாவிபொருளாக்கையாலேதினந்தி னமும்பூசிக்கவேண்டுமாணுன். (சச)

வேறு,

தேசிகருமாணவர்கள்செய்தியுணர்ந்திடவேசி றியோரைப்பெரியோர்செய்தொழிலதினிற்செறித்து, மேசிலராம்பெரியோரையீனமாந்தொழிற்கேயிசைத்து மடித்தும்வைதுமிவ்வாறுசெயவும், கூசியிடாதிட் டபணிசெய்துகுருபத்திகுறைவிலராய்நம்பினராய்த்து ரோகமின்றி, மாசிலராய்மனவாக்குக்காயத்தாற்குரு வின்வாக்கியபாலனஞ்செய்யுமதிமாணுமாமே. (சரு)

வேறு,

குருபாலனுக்கவனெஞ்சகம்போலனுகூலத்தனுய்க், கரசரணுதியினேவல்செய்தேதினங்கட்கிமைபோ, லு ரியமனைமுதலியாவையுங்காத்துண்மையாயொருதற், ப ரமிவனேயெனக்காண்பான்சற்சிடன்பகர்ந்திடினே, (சசா)

வேறு.

தேசிகன்பாற்பற்பலதீக்குணங்கள்செறியினூடட்,
பாசப்பிராந்திக் கிவைதோற்றியவிறை பாலிலேயென்,
றாசறுபத்தியினோர்ந்தெவ்விதத்துமவனருளேத், தேச
ங்குலவவளர்ப்போன்சற்சீடன்றெரிந்திடினே. (சஎ)

வேறு.

விடையேறியீசன்வரின்மூடருமவன்வேண்டிய
தைப், படிமீதளிப்பர்குருவேசிவமெனப்பாவனைமுற்,
றுடையார்கடச்சமுடலாவியீந்திறையுண்மைபெறக்,
கடையாதுளவிங்குளசேலபக்குவர்சாமவரே. (சஅ)

வேறு,

உடற்குயிர்போற்கட்கிமைபோலாசிறாலொத்து,
விடிற்புலிதீப்பாம்பினில்வீழ்வார்க்காஞ்சுடர்ச்சுடினு
ம், விரைமைக்காகாவெதிமட்கலத்திற்காகாவா,றேழைக்
காகாததிது. (சக)

வேறு.

ஆசான்மொழியானூற்பொருளாலன்றிப்பெறவும
ரிதாகுந், தேசார்குருநான்மாணாக்கன் சிறக்கவிம்மூவ
ருங்கூடிற், பாசாதிதப்பரமெய்தும்பன்னூணீங்காவி
க்கூட்ட, மேசாவுணர்வைத்தரும்பாகற்போதெல்லாத்
தொழிலுந்தருவதுபோல். (ருo)

பாடல் முற்றிற்று.

# சீடாசாரம்.

## வசனம்.

ஸ்திரீயானவள் நாயகனோடே கூடிக்கொண்டிருந்தாற்பணிவிடை செய்யவேண்டுமென்றுந் தனித்திருந்தாற் சுகமாயிருக்கலாமென்றும் நினைத்து அந்தநாயகனுக்கு மனவருத்தமுண்டாகும்படியா யவனைவிட்டு நீங்கியிருந்தா லிம்மையிற்சுகமுமிழந்து மறுமையினரகமுமனுபவிப்பதுபோலச் சீடனானவன் ஞானாசாரியரிடத்திற்குப்போ யவரிடத்திற் சில சாத்திரங்களை யப்பியாசித் தறிந்துகொண்டு நாமினி யிவரிடத்திலேயிருந்தா லிவருக்குப்பணிவிடை செய்துகொண்டிருக்கவேண்டுமென்றும் நம்முடையசிரவணாதியனுசந்தானத்துக்கு விரோதம்வருமென்று மிவரிடத்தினமக்கு தேகத்துக்கொத்துக்கொள்ளாதென்றுமி து முதலான காரியங்களை நினைத்து அந்த ஞானாசாரியருக்கு மனதிற்றுவேஷம் வரும்படியா யவரைவிட்டு நீங்கியிருக்கினவனுக்கிம்மையிற்றுன்பமுமறுமையினரகமுமுண்டாகுமாதலாற்கற்புடைய ஸ்திரீயானவ ளறியாமையைப் பொருந்தியிருக்குமாத்மசொரூபத்தையறியாமலாத்மசொரூபமேதானென்றிருக்கின்றதனதுநாயகனைத்தெய்வமாகப்பாவித்து அவன் அடித்தல்வைதல்முதலாயின செய்தபோதிலுமவனிடத்திற்றுவேடமன்றியிற்பிரியமாகத்தேகமுள்ளபரியந்தமவனைவிட்டுநீங்காமற்றிரிவிதகரணங்களாலும்பணிவிடைசெய்துகொண்டிருக்கின்

றவனுக்குஇம்மையிற் சுகமு மறுமையிற் சுவர்க்காதி லோகமுமுண்டாவதுபோலஉத்தமமானவிவேகமுள்ள முமூட்சுவானவன்ஞானாசாரியரைசத்தியஞான அனந்தானந்தபரம்சிவமென்றுவேதாதிகள்சொன்னபிரகாரம்நம்பி அவரடிமுதலானகாரியங்கள் செய்தபோதிலுஞ்செய்யத்தகாதகிர்த்தியங்களைச் செய்யச்சொன்னபோதிலும் வெறுப்படைந்து அவரைவிட்டு நீங்காதபடிக்கு மிருந்தபிரியத்தோடுந் தேகமுள்ளவரைக்குந்திரிவிதகரணங்களாலும் பணிவிடைசெய்து நின்று அந்தக் குருசுவாமி கிருபையால் தத்துவ ஞானத்தைப்பெற்று மோக்ஷமடையவேண்டுமென்று வேதாகமபுராணாதிகள் கூறுதலால் இப்போதிருக்கின்ற முமூட்சுக்களு மிதிற்சொன்ன பிரகாரம் ஞானாசாரியரைப்பரமசிவமாகப் பாவித்துத்தேகமுள்ள பரியந்தமுமவரைவிட்டு நீங்காமற் றிரிவிதகரணங்களாலும் பணிவிடை செய்து நின்று அவர்கிருபையாலுண்டாகாநின்ற தத்துவஞானத்தினாற்பரமோக்ஷசுகத்தையடையவேண்டியது.

சீடாசாரம் முற்றுப்பெற்றது.

---

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# ஏதுசொரூபங்காரிய மவதிபல லக்ஷணம்.

## காமத்துக்கு

ஏது, அஞ்ஞானம். சொரூபம், அக்கினியில் நெய்விட்டால் விர்த்தி யடைகிறதுபோல நமக்கிருக்கின்ற போகமெல்லா முத்தரோத்தரமாய் விர்த்தியடையவேண்டுமென்றும் நமக்கிருக்கின்ற ஐசுவரியமெல்லாமாறாமலிருக்க வேண்டுமென்றும் ஸ்திரீ முதலான விடயங்கள்மேன்மேலும் வேண்டுமென்றும் நானாவிதமாய்ச் சிந்திக்கிறது. காரியம், அந்தவிடயத்திலுண்டான பிரியத்தை நானாவிதமாய்ச் சிந்தித்துத் தானிருந்த விடத்தை விட்டு லோகாலோகங்களுக்குப்போய் நரகாசுரன் முதலானபேர்களைப்போல இஷ்டமானவஸ்துக்களைச் சம்பாதிக்கிறது. அவதி, அத்தியந்தநிராசை யுதயம்.

(௧)

## குரோதத்துக்கு

ஏது, ஆசை. சொரூபம், ஆசையானவிடயத்தில் விக்கினம் பண்ணினவனிடத்திற் கோப முண்டாய் வியாக்கிரசமானமாய் நோக்கிக் கடினமான வசனந்

சொல்லுகிறது. காரியம், தன்னாற்செயிக்கப்படுமானு ல்பகாசுரன் முதலானபேர்களைப்போல அடி முதலான காரியங்கள்பண்ணுகிறது; தன்னாற்செயிக்கக்கூடாதி ருந்தாலுள்ளே யிருந்துகொண்டு பொருமியழுகிறது. அவதி, அத்தியந்தஞ்சாந்தமாயிருக்கின்ற பொறுமை யுதயம். (உ)

லோபத்துக்கு

ஏது, மோகம். சொரூபம், தேனீயுங் கவரிமா னும்போலத் தான் சம்பாதித்த செல்வ முதலான வஸ் துக்களிற்றேகமுள்ளளவு மொருத்தருக்கு மொன்றுங் கொடுக்கலாகாதென்று சிந்திக்கிறது. காரியம், தான் சம்பாதித்த பதார்த்தங்களி லூரின் நடுவேயிருக்கின்ற நச்சுமாமரம் போலவுந் துரியோதனன் முதலானபேர் களைப்போலவு மொருத்தருக்குமொன்றுங்கொடாமல் வைத்துக்கொள்ளுகிறது. அவதி, அத்தியந்தமுதாரத் துவம்.

இந்த மூன்றுக்கும் பலமேதென்றா லிகலோகபர லோகநிந்தையுமிப்போது தேகமுதலானவஸ்து நாசத் தினாற்றுன்பமும் பின்னாலே சனனமரண சமுசாரமு மாம். (ங)

நிராசைக்கு

ஏது, நிட்காமமாய்ச்செய்கின்ற சற்கருமபுண்ணி யபரிபாகம். சொரூபம், ஸ்திரீ முதலானவிடயத்தினு

ள்ளதோஷங்களை விசாரித்ததிலுள்ளவாசையைவிட்டு விடுகிறது. காரியம், ஆசைவிடுபட்ட பதார்த்தங்களுள் ததீசிமகரிஷி முதலான பேர்களைப்போலச் சரீரமுத லான வஸ்துக்களைக் கேட்ட பேர்களுக்குக் கொடுத்து விடுகிறது. அவதி, அத்தியந்தங்காமத்துக்குநாசம்.(௪)

பொறுமைக்கு

ஏது, நிராசை. சொரூபம், தன் வேலைக்காரன் முதலானபேர்க ளடி முதலான காரியங்களைச் செய்த போதிலும் வினைப்பிரகாரம் வருமென்கின்ற விவேகத் தினாற் பொறுத்துக்கொள்ளுகிறது. காரியம், தனக்க பகாரம் பண்ணின பேர்களுக்குப் பூமியைப் போலவுந் தர்மபுத்திரர் முதலான பேர்களைப்போலவு முபகாரம் பண்ணுகிறது. அவதி, அத்தியந்தங்குரோதத்துக்கு நா சம். (௫)

உதாரத்துக்கு

ஏது, குறைகுணங்களைப் பகுத்துப் பார்க்கின்ற விவேகம். சொரூபம், ஊரின்நடுவே நிறைந்திருக்கின்ற நல்லஜலமுள்ள தடாகமும் நன்றாய்ப்பழுத்துநிழலுடை த்தாயிருக்கின்ற மாமரமும்போலச்சகல சனங்களுக்கு முபகாரமாயிருக்கிறது. காரியம், வேர் முதற் கொழுந் து வரைக்குமுயிர்களுக்கு மருந்திற்குபகாரமாயிருக்கி ன்றமரம்போலவுஞ் சிவிச்சக்கிரவர்த்தியைப்போலவுங்

கேட்டபேர்களுக்கெல்லாங் கேட்டவஸ்துக்களைக்கொடுக்கிறது. அவதி, அத்தியந்தம் லோபத்திற்கு நாசம்.

இந்த மூன்றுக்கும் பலமேதென்று லிகலோக பரலோககீர்த்தியு மிப்போது துக்கமற்றுச் சுகமாயிருந்துகொண்டுஞானமோக்ஷசாதனங்களைச்சம்பாதித்து அவற்றுலுறுமோக்ஷப்பேறு மிந்தஞானசாதனஞ்சம்பாதிக்குங் காலத்திற்றேகமிறந்தாற் சுவர்க்காதி சுகமுமாம்.

நித்தியா நித்திய வஸ்து விவேகத்துக்கு

ஏது, சித்தசுத்தி. சொரூபம், பிரமமாத்திரம்நித்தியம் அன்னியமாயிருக்கின்ற சிவேசுர சகத்தெல்லாமநித்தியமென்று சாத்திரத்தினுல்நிச்சயிக்கிறது. காரியம், அதைத்தானே சதாகாலமு நானுவிதமாய்ச்சிந்திக்கிறது. அவதி, பிரமமாத்திரநித்தியமன்னியமாயிருக்கின்றசிவேசுரசகத்தெல்லா மநித்தியமென்றிருக்கின்றநிச்சயம் ஒன்றினுலும்போகாமல் நன்றாய்த்திடமாயிருக்கிறது. (எ)

இகாமுத்தரார்த்த பலபோக விராகத்துக்கு

ஏது, இகலோக பரலோகங்களிலுள்ள ஸ்திரீமுதலான விடயங்களில் அசுத்த துக்கவநித்தியத்துவமுதலான தன்மைகளை விசாரித்து வெறுப்பு வருகிறது. சொரூபம், அந்த விடயங்களை நாய்தின்றுகக்கின அசனம்போலவுங் காலாக்கினி நரகமுதலானது போலவுங்

கண்டுவிட்டுவிடுகிறது. காரியம், விட்டவிடயத்திலொ ருபோதிலுந்திரும்ப ஆசை வராமலிருக்கிறது. அவதி, தேகத்தைத் தொட்டுப்பிரமலோகபரியந்தமாயுள்ளவிக லோக பரலோகங்களிலிருக்கிற சகலபோகங்களிலேயு மாசையில்லாமற் றிரணம்போல உபேட்சையாயிரு கிறது. (அ)

சமாதிசட்கசம்பத்திக்கு

ஏது, இயமநியமாதி. சொரூபம், விடயத்திலே பிரவிர்த்தி யற்றிருக்கிற சித்தநிரோதம். காரியம், ஒன் றிலேயும் பிரவிர்த்தி யற்றபடியினாலே விவகாரக்ஷயம். அவதி, பிரவிர்த்தி யற்றபடியினாலே சுழுத்தியைப்போ லே தேக முதலான விடயங்களை மறந்திருக்கிறது (கூ)

முமூட்சுத்துவத்துக்கு

ஏது, சாதுசங்கம், சொரூபம், தலை ரோமத்தி லே நெருப்பு பற்றிக்கொண்டவனைப்போலப் பின்னை யொன்றிலேயு மாசையில்லாமல் மோக்ஷமாத்திரத்தி லே தீவிரமாக ஆசையுண்டாகிறது. காரியம், சற்குரு வைத்தேடியடைகிறது. அவதி, சகலகருமங் களையுந்தி யாகம் பண்ணுகிறது.

இந்தச்சாதனங்கள் நாலுக்கும்பலமேதென்றால், இந்த நாலு மொருமித்துக்கூடாமல் வேறுவேறாய்ப் பிரிந்திருந்தாற் சுவர்க்காதியாயிருக்கின்ற புண்ணிய லோகப்பிராப்தியே பலம், நாலு மொருமித்துக்கூடினா லிந்தே கதானே ஆத்மவிசாரபலம். (கா)

ஏதுசொரூபங்காரிய மவதிபலலக்ஷணம்.




பந்தத்துக்கு

ஏது, கருமசாஸ்திரவனுட்டானம். சொரூபம், திருசிய சிந்தனை. காரியம், திருசியத்தினிடத்தில்வாசனையோடு நானாவிதமாய்ச் சத்தியமாயழுந்துகின்ற சிந்தனை. அவதி, சகல திருசியமு மில்லையென்கின்றவத்தியந்தாபாவஞானம். பலம், சமுசாரதுன்பம். (கக)

மோட்சத்துக்கு

ஏது, ஞானசாஸ்திரவனுட்டானம். சொரூபம், திருசிய சிந்தனை யில்லாமலிருக்கிறது. காரியம், திருசிய சிந்தனை யானது வாசனையோடு வத்தியந்த மொன்று மில்லாம லிருக்கிறது. அவதி, சின்மாத்திரமாய் விளங்குகிறது. பலம், பிரமானந்தம். (கஉ)

ஞானத்துக்கு

ஏது, சிரவணமனனநிதித்தியாசனம். சொரூபம், சுவா னுபவத்தினாலே தேகாதிப் பிரபஞ்சங்களினின்றுந் தா னாகின்றவகண்டபரிபூரண சச்சிதானந்தப் பிரமத்தை வேறு கண்டறிவது. காரியம், அநாத்மாவானபஞ்சகோ சங்களில் ஆத்ம புத்தியும்மித்தையான ஆகாசாதிசகத்தி னிடத்திலே சத்திய புத்தியும் வாராமலும் ஆத்மாவினி டத்திலே தானென்றுறைத்தபுத்திவாங்காமலுமிருக்கி றது. அவதி, அஞ்ஞானகாலத்திற்சந்தேக விபரீதமன்றி யிலே தேகமேதானென்றிருந்தாற்போல ஞானகாலத் திலே தேகோகமென்கின்றபுத்தியை வாதிக்காநின்ற சி வோகமென்கின்ற உறைப்புத்திடம். பலம், மோக்ஷம். (கங)

உச ஏதுசொரூபங்காரிய மவதிபலலக்ஷணம்.

அஞ்ஞானத்துக்கு

ஏது, நிரோதம். சொரூபம், ஒன்பது விதத்தினாலும் நிரூபிக்கப்படாமலிருக்கிறது. காரியம், ஜீவேசுர சகத்தாய்த் தோற்றுகிறது. அவதி, ஞானோதயம். பலம், நிஷ்பலம். (கச)

அசம்பாவனைக்கு.

ஏது, சிரத்தையுடன் வேதாந்தசிரவணஞ்செய்யாமை. சொரூபம், ஆத்ம சொரூப சிந்தனையை மறைத்தல். காரியம், ஜீவேசுர சகத்துச் சிந்தனையைத்தோற்றுவித்தல். அவதி, அவதிபரியந்தமுண்டான சிரவணம். பலம், தாபத்திரயத் துன்பப்படுகிறது. (கரு)

சமுசயபாவனைக்கு

ஏது, விசாரமில்லாமலிருக்கிறது. சொரூபம், தான் கர்த்தாவோ சாட்சியோ சாட்சியென்றாலுங்கர்த்துருத்துவ போத்துருத்துவாதியுண்டோ வில்லையோ கர்த்துருத்துவாதியில்லாவிட்டாலும் அவருக்குப் பூரணத்துவமுண்டோ வில்லையோ பூரணத்துவமுண்டானாலும் அவரை யறியக்கூடுமோ கூடாதோ அவரையறிந்தாலும் மோட்சம் வருமோ வாராதோ வென்று இது முதலாய்வருகின்ற சித்தவிருத்திகள். காரியம், முன்சொன்ன சித்தவிருத்திகள் திரும்பத் திரும்பப்பலவிதமாயுண்டாகிறது. அவதி, தீர்க்ககால விசாரம். பலம், இகலோக பரலோக போகங்களிரண்டு மற்றுத்துன்பமடைகிறது. (கசா)

விபரீதபாவனைக்கு

ஏது, ஆத்மத்தியானஞ் செய்யாதிருக்கின்றது. சொரூபம், தேகமே தானென்றும் பிரபஞ்சஞ்சத்திய மென்றும் இவை முதலாய்வருகின்ற விருத்திகள். காரியம், நான் பிராமணசாதி வருணமுடையவனென்றும் நான் பிரமச்சரிய முதலான ஆச்சிரமமுடையவனென்றும் நான்காத்தியாயினர் முதலான குலமுடையவனென்றும் நான் கிருஷிமுதலானதொழில் பண்ணுகிறவனென்றும், நான் யாகாதிகளைப்பண்ணினேன், நான் அன்னதிகளைப்புசித்தேன், நான் கடாதிகளை யறிந்தேனென்றும் இவை முதலாகவருகின்ற விருத்திகள். அவதி, நாமரூபப்பிரவிர்த்தியில்லாம லிருக்கின்ற தானாகிற ஆத்மத்தியானம். பலம், சனனமரண சமுசார துக்கத்தி லடிபடுகிறது. (கஎ)

சிரவணத்துக்கு

ஏது, அதிதீவிரமான முமுக்ஷுத்வம். சொரூபம், வேதாந்தங்களாகிய உபநிடதங்களுக்கு அத்வைதப்பிரமத்தின்கண்ணே தாத்பரியமாமென்று ஆறுலிங்கங்களினாலும் நிச்சயஞ்செய்தல். காரியம், பிரமாணகதசந்தேக நிவர்த்தி. அவதி, நஷ்டமானபிரமாணகதசந்தேகம்மீண்டுண்டாகாமை. பலம், பிரமாணகதஅசம்பாவனையின் நிவர்த்திவாயிலாகமோக்ஷம். (கஅ)

மனனத்துக்கு

ஏது, சிரவணம். சொரூபம், சீவப்பிரமங்களின் பேதத்தைப்பாதிப்பனவும் அபேதத்தைச்சாதிப்பனவுமாகியயுக்திகளால் அத்வைதப் பிரமத்தைச்சிந்தித்தல். காரியம், பிரமேயகத அசம்பாவனை நிவர்த்தி அவதி, நிவர்த்தியான பிரமேயகத அசம்பாவனை மீண்டுண்டாகாமை. பலம், பிரமேயகத அசம்பாவனையின் நிவர்த்திவாயிலாக மோக்ஷம். (௧௯)

நிதித்தியாசனத்துக்கு

ஏது, சிரவணமனனங்கள். சொரூபம், அநான்மாகார விருத்தியின் வியவதானமின்றிய பிரமாகாரமான விருத்தியின் ஸ்திதி. காரியம், விபரீதபாவனையின் நிவர்த்தி. அவதி, நிவர்த்தியான விபரீதபாவனை மீண்டுண்டாகாமை. பலம், விபரீதபாவனையின் நிவர்த்திவாயிலாக மோக்ஷம். (௨0)

வாசனைக்கு

ஏது, பகிர்முக நாட்டமாகிய விடயசன்னிதி. சொரூபம், திடபாவனையால் முன்பின் னென்றையும் விசாரித்துப்பாராமல் உண்டாகுங் குரோதாதிவிருத்திகட்கேதுவான சித்தத்தின் சூக்ஷுமமாவஸ்தையாகிய சமஸ்காரம். காரியம், முன்சொன்ன வசுத்தவாசனைஜன்ய காமாதி விருத்திகள் வாயிலாய் அமிர்தமாயு மணுவுக்கணுவாயும் அத்வைதமாயு மகண்டானந்தமாயு மிருக்

கின்ற தனதாத்மசுபாவந்தோன்று மற்பண்ணுகிறது. அவதி, மனோலயம். பலம், சுகதுக்காதிய் மதனால் விட்சேபம் இல்லாததாயும் விமலமாயும் விஞ்ஞானமாயும் விமுத்தமாயும் விபுவாயுமிருக்கின்ற பிரமசொரூபவிஷயகதத்துவஞான நிவிர்த்தியுமதனாற்சனனமரண சமுசாரமுமாம். (உக)

வாசனாக்ஷயத்துக்கு

ஏது, அகமுக நாட்டமாகிய விடயசன்னிதித்தியாகம். சொரூபம், சமர்த்தனானவன்றனக்குப்பகையாளனிடத்தி லுண்டானகுற்றத்தை நன்றாய்விசாரித்தறிகின்றதுபோலக் காமாதி யசுத்தவாசனைகட்குள் தன்னிடத்திலின்னவின்னவசுத்தவாசனைகளிருக்கிறதென்று நன்றாய்ப் பகுத்தறிந்துகொண்டு வியாதியுடைத்தானவன்றன்னிடத்திலின்னவின்ன வியாதியிருக்கிறதென்றறிந் ததுவதுகளுக்குத் தகுந்தவவுடதங்களைப்புசிக்கின்றதுபோல மைத்திரியாதி சுத்தவாசனைகட்குள் அதுவதுகளுக்குத் தகுந்தசுத்தவாசனையைச் சிரத்தையோடுந் தினந்தோறும் நன்றாயப்பியாசிக்கின்றது. காரியம், முன்புசித்த அவுடதத்தால் ரோகம்நாளுக்குநாள் சாந்தமா யாரோக்கிய முண்டாகின்றதுபோல நாளுக்குநாள் காமாதியசுத்தவாசனைகள் நிவிர்த்தியடைகின்றது. அவதி, முன்சாந்தமான காமாதியசுத்தவாசனைகள் திரும்பவுண்டாகாமலிருக்கின்றது. பலம், சித்தோபசாந்தமு மதனால் அமலமாயுமக்கிரியமாயு மப்பி

ரமேயமாயு மசங்கமாயு மிருக்கின்ற பிரமசோரூபமே நான் நானேயமலமாயு மக்கிரியமாயு மப்பிரமேயமாயு மசங்கமாயு மிருக்கின்ற பிரமசொரூபமென்கின்ற தத்துவஞான ரட்சையு மதனாற் சனனமரண சமுசாரதுன்பநீக்கமுமாம். (உஉ)

மனத்துக்கு

ஏது, பகிர்முக நாட்டத்தாலுண்டாகிறகாமாதி வாசனைகள். சொரூபம், மெழுகு சலமுதலான வஸ்துக்கள்போல வனேகவிருத்திகள் பரிணமிக்கின்றதற்கேதுவாயுந் திரிகுணாத்மகமாயு மியானெனதென் றபிமானமுடைத்தாயு மிருந்துகொண்டு தீபச்சுவாலைபோலவத்தைப்பண்ணவேண்டு மித்தை விடவேண்டு மென்று மத்தைப் புசிக்கவேண்டு மித்தை நீக்க வேண்டுமென்று மத்தைப் பார்க்கவேண்டு மித்தைப் பார்க்கவேண்டாமென்று மிதுமுதலாயுண்டாகாநின்ற விருத்திகள். காரியம், முன்சொன்ன விருத்திகள் க்ஷணேக்ஷணோநானாவிதமாயுண்டாகிநித்தசுத்தபுத்தமுத்தசத்திய பரமானந்தசொரூபந்தானென்னுமேதான் றுமறப்பண்ணுகிறது. அவத்தி, வாசனாட்சயம். பலம், வாசனாவிர்த்திகளினாற் சத்தாயுஞ்சர்வசமமாயுஞ்சர்வசாட்சியாயுஞ்சர்வாத்மகமாயுமிருக்கின்ற பிரமசொரூபமே நான்நானே சத்தாயுஞ்சர்வசமமாயுஞ்சர்வசாட்சியாயுஞ் சர்வாத்மகமாயுமிருக்கின்ற பிரமசொரூப மென்கின்ற தத்துவஞான நிவிர்த்தியுமதனாற்சனனமரணசமுசாரதுன்பமுமாம்()

மனோலயத்துக்கு

ஏது, அகமுக நாட்டத்தாலுண்டாகின்ற காமாதி வாசனாட்சயம். சொரூபம், மிகுந்தசிரத்தையுடனேசத்தியஞானவனந்தானந்தப்பிரமசொரூபமே நான்நானே யந்தச்சத்தியஞான வனந்தானந்தப்பிரம சொரூபமென்று பிரியத்துடனே விச்சின்னமன்றியிலே தைலதாரைபோலச் சந்ததந்தியானம்பண்ணுகிறது. காரியம், வாசனாட்சயத்தினாற் றாமதராசத விருத்திகள் கெட்டுப் பாலிற்கலந்தசலம்போல நிர்க்குணமாயும் நிர்மலமாயும் நிர்விகாரமாயும் நிர்விகற்பமாயும் நித்தியானந்தமாயுமிருக்கின்ற தனதாத்மசொரூபத்தில்சுத்தசாத்வீகவிருத்திமாத்திரமாய் லயித்திருக்கின்றது. அவதி, முன்சாந்தமான தாமதராசதவிருத்திகள் திரும்பவுண்டாகாமலிருக்கின்றது. பலம், வாசனாட்சயத்தினால் சுத்தமாய்ச் சுபாவமாய்ச் சுகமாயிருக்கின்ற பிரமசொரூபமே நான் நானே சுத்தமாய்ச் சுபாவமாய்ச் சுகமாயிருக்கின்ற பிரமசொரூபமென்கின்ற தத்துவஞான ரட்சையாய் அதனாற் சனனமரண சமுசாரதுன்பம் நீங்கிப் பிரமானந்தானுபவிக்கப்படுவதாம். (உச)

ஏது சொரூபங் காரிய மவதி பல லக்ஷணம்

முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்

உ

சிவமயம்.

# இராகாதி பதிமூன்றின் விஷயம்.

---

நாகநிக ரல்குலைவி ரும்புவதி ராகமா நயமிலப கா ரந்துவேஷம், நாடுபொருள் விக்கினரைப் பகைப்பதுகு ரோதமா நானாவி தாசைகாமம், மோகமது மகனாதி வஸ் துமேற் பிரியமா முறையினீ யாமைலோபம், மொழி மதங் கிர்த்தியா கிர்த்தியந் தெரியாமை முதன்மையா யொருவன்வாழில், வேகமா யவனையே சகியாமை மாச் சரியம் வெப்பமாந் துக்கம்வந்தால் வேறொருவ ருக்கு வரவெண்ணுகிற தீரிஷை மேலான சுகமடைந்தாற், றா கமாய்ப் பிறருக்கு வரவொணா ததசூயை தனைமெச்ச லேயிடம்பந் தர்ப்பமது பெரியவன் றானெனல கங்காரந் தன்பிடிவி டாதபிடியே. (௩)

பரதாரம் விரும்பிரா கத்தினா லிராவணனைப் பலா ரிய ராமர்கொன்றார் பாரிலப காரஞ்செய் துவேஷங் கொ ளிரணியனை பன்னுநா ரணரழித்தார், சுரர்மாத னைகளைக் காமமொடு பிடிநரக சூரனைக்கிருஷ்ணர்கொ ன்றார் துப்த்துணவு விக்கினவீ மன்மேற்கு ரோதபக சூரனை வீமர்கொன்றார், கிரமமாய்த் துரியோத னன் கொடா லோபக்காற் கீர்த்தியுறு வீமர்கொன்றார் கெம்

பிர ராமர்மேன் மோகங்கொள் தசரதர் கீழ்விழுந் திறப் பதானார், விரிவான வைசுவரிய மதத்தினு லேகார்த்த வீரியார்ச் சுனன்வீட்டினின் மேவிவரு நாரதர்க் குபச ரியாததான் மென்பரசு ராமர்கொன்றார். (௨)

சிசுபாலன் மேலெனவு மச்சரங் கொண்டதாற் செருக்கறக் கிஷ்ணர்கொன்றார் சேர்ந்தநோய்ப் பிறரு ற வீரிஷைகொள் ளருணாக்ஷன் சிரம்வாணு சூரர்கொ ன்றார், நசிபவுண் டரிகவாசு தேவன்கொள் ளசூயையா னல்வாசு தேவர்கொன்றார் நபூருவன் யாகமது டம்ப மொடு செய்ததான் ஞான துருவாசர்கொன்று, ரைசு வரிய மிகுதியாற் றர்ப்பங்கொள் சதகந்தா னழிவுறச் சீ தைகொன்று ளகங்கரங் கொண்டமது கைடவர்க ளுசமுற வளிவிஷ்ணு வேயழித்தார், விசுவாச மாகவேமுக் தியைவி ரும்புநன் மெய்யடிய ரென்றுநீக்கி விட்டவிப் பதின்மூன்று குற்றமத கற்றுவோர் மெய்வீடு சேர்ந்துய் வரே. (௩)

இராகாதி பதின்மூன் றின் விஷயம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்



சிவமயம்.

திருச்சிற்றம்பலம்

## குரு ஸ்துதி.

சகந்தனிலேபிறந்திறந்துவீணாகநாட்கழித்துத்தவித்த
வென்ற, னகந்தனிலேயிருக்கின்றபரவடிவையானறிய
வன்புவைத்துச், சுகந்தனிலேமேலானசுகம்பரமசுகமெ
ன்றேதோன்றக்காட்டு, முகந்தகுருதேசிகனையனுதின
முமிருதயத்திலுட்கொள்வேனே.

வேதமுதல்முனிவர்களுந்தேடிக்காணுமெய்ப்பொரு
ளேயடியர்பவநீக்கவெண்டி, ஓதரியகழனிநகர்தனி
லமர்ந்தவுத்தமனேமக்தனுளத்துணர்வேபோற்றி, ஏத
மதாம்விடயமதிலுழல்வேனுக்கிங்கிரங்கியெனைத்துஞ் சொரூ
பமௌனவிசைத்தாய்போற்றி, மூதுணர்வேவடிவாகியம
ர்ந்துநின்றமுக்திராமக்கனியேபோற்றிபோற்றி.

---

## பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| ௬ | ௪ | தகைவுடை | தகையுடை |
| ௨௰ | ௯ | விடுபட்ட | விடுக்கப்பட்ட |